அந்தரங்கமானது



# இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்

## க.பொ.த (உயர் தர)ப் பரீட்சை - 2018

## 28 - மனைப் பொருளியல்

### புள்ளியிடும் திட்டம்



இந்த விடைத்தாள் பரீட்சகர்களின் உபயோகத்துக்காகத் தயாரிக்கப்பட்டது. பிரதம பரீட்சகர்களின் கலந்துரையாடல் நடைபெறும் சந்தர்ப்பத்தில் பரிமாறிக்கொள்ளும் கருத்துக்களுக்கிணங்க, இதில் உள்ள சில விடயங்கள் மாறலாம்.

இறுதித் திருத்தங்கள் உள்ளடக்கப்படவுள்ளன

# உள்ளடக்கம்

புள்ளி வழங்கல் தொடர்பான சாராம்சம்

இறுதிப் புள்ளி கணித்தல் தொடர்பான அறிவுறுத்தல்

புள்ளித்திட்டம் தயாரிப்பதற்கான அறிவுறுத்தல்கள்

விடைத்தாள் புள்ளியிடல் தொடர்பான அறிவுறுத்தல்

I ஆம் வினாத்தாளின் குறிக்கோள்கள்

முதலாம் வினாத்தாள்

I ஆம் வினாத்தாளின் புள்ளி வழங்கும் திட்டம்

II ஆம் வினாப்பத்திரத்தின் குறிக்கோள்கள்

II ஆம் வினாத்தாளின் புள்ளி வழங்கும் திட்டம்

# புள்ளி வழங்கல் தொடர்பான சாராம்சம்
# மனைப்பொருளியல் II

## பகுதி I

| வினா இலக்கம் 01 கட்டாய வினா | | |
|---|---|---|
| i. | | 04 |
| ii. | | 04 |
| iii. | a. | 02 |
| | b. | 05 |
| iv. | a. | 02 |
| | b. | 08 |
| மொத்தப் புள்ளிகள் | | 25 |

| வினா இலக்கம் 02 | | |
|---|---|---|
| i. | a. | 02 |
| | b. | 03 |
| ii. | | 05 |
| iii. | | 05 |
| iv. | | 05 |
| மொத்தப் புள்ளிகள் | | 20 |

| வினா இலக்கம் 03 | | |
|---|---|---|
| i. | | 05 |
| ii. | | 05 |
| iii. | a. | 05 |
| | b. | 05 |
| மொத்தப் புள்ளிகள் | | 20 |

| வினா இலக்கம் 04 | | |
|---|---|---|
| i. | a. | 02 |
| | b. | 03 |
| ii. | | 05 |
| iii. | | 05 |
| iv. | | 05 |
| மொத்தப் புள்ளிகள் | | 20 |

## பகுதி II

| வினா இலக்கம் 05 | |
|---|---|
| i. | 05 |
| ii. | 04 |
| iii. | 06 |
| iv. | 05 |
| v. | 05 |
| மொத்தப் புள்ளிகள் | 25 |

| வினா இலக்கம் 06 | |
|---|---|
| i. | 05 |
| ii. | 05 |
| iii. | 05 |
| iv. | 05 |
| மொத்தப் புள்ளிகள் | 20 |

| வினா இலக்கம் 07 | |
|---|---|
| i. | 05 |
| ii. | 05 |
| iii. | 05 |
| iv. | 05 |
| மொத்தப் புள்ளிகள் | 20 |

| வினா இலக்கம் 08 | | |
|---|---|---|
| i. | | 06 |
| ii. | | 03 |
| iii. | a. | 03 |
| | b. | 03 |
| iv. | | 05 |
| மொத்தப் புள்ளிகள் | | 20 |

| வினா இலக்கம் 09 | | |
|---|---|---|
| i. | a. | 02 |
| | b. | 03 |
| | c. | 05 |
| ii. | a. | 04 |
| | b. | 06 |
| மொத்தப் புள்ளிகள் | | 20 |

# இறுதிப் புள்ளி கணித்தல் தொடர்பான அறிவுறுத்தல்

**I ம் வினாப்பத்திரம் - இறுதிப் புள்ளி கணக்கிடல்**
வினா இலக்கம் 01 முதல் 50 வரை ஒன்றுக்கு ஒரு புள்ளி வீதம் 50 x 01 =50 புள்ளிகள்

**IIம் வினாப்பத்திரத்தின் இறுதிப் புள்ளி கணக்கிடல்**
இவ்வினாப்பத்திரம் இரண்டு பகுதிகளைக் கொண்டது. முதலாம் பகுதியில் 4 வினாக்கள் தரப்பட்டுள்ளது அதில் முதலாம் வினாவுக்கும் இன்னும் இரண்டு வினாக்களுக்கும் விடை எழுத வேண்டும்.

பகுதி I

| | | |
|---|---|---|
| 1ம் வினாவிற்கு | | = 25 புள்ளிகள் |
| தெரிவு செய்யும் ஏனைய வினாக்கள் இரண்டு | = 02 x 20 | = 40 புள்ளிகள் |
| **மொத்தம்** | **= 25 + 40** | **= 65 புள்ளிகள்** |

இரண்டாம் பகுதியில் 5 வினாக்கள் தரப்பட்டுள்ளது அதில் ஐந்தாம் வினாவுக்கும் இன்னும் மூன்று வினாக்களுக்கும் விடை எழுத வேண்டும்

பகுதி II

| | | |
|---|---|---|
| 5ம் வினாவிற்கு | | = 25 புள்ளிகள் |
| தெரிவு செய்யும் ஏனைய வினாக்கள் 3 ற்கு | = 03 x 20 | = 60 புள்ளிகள் |
| **மொத்தம்** | **= 25+ 60** | **= 85 புள்ளிகள்** |
| **II ம் வினாப்பத்திரத்தின் இறுதிப் புள்ளிகள்** | **= 65 + 85** | **= 150** |

**இறுதிப் புள்ளி கணக்கிடல்**

| | | |
|---|---|---|
| I முதலாம் வினாப்பத்திரத்தின் புள்ளி | | = 50 |
| II இரண்டாம் வினாப்பத்திரத்தின் புள்ளி | | = 150 |
| மொத்தம் | = 50 + 150 | = 200 |
| **இறுதிப் புள்ளிகள்** | **= 200/2** | **= 100** |

## விடைத்தாள்களுக்குப் புள்ளியிடல் - பொது நுட்ப முறைகள்

விடைத்தாள்களுக்குப் புள்ளியிடும் போதும், புள்ளிப்பட்டியலில் புள்ளிகளைப் பதியும் போதும் ஓர் அங்கீகரிக்கப்பட்ட முறையைக் கடைப்பிடித்தல் கட்டாயமானதாகும். அதன்பொருட்டு பின்வரும் முறையில் செயற்படவும்.

1. விடைத்தாள்களுக்குப் புள்ளியிடுவதற்கு சிவப்பு நிற குமிழ்முனை பேனாவை பயன்படுத்தவும்.
2. சகல விடைத்தாள்களினதும் முதற்பக்கத்தில் உதவிப் பரீட்சகரின் குறியீட்டெண்ணைக் குறிப்பிடவும். இலக்கங்கள் எழுதும்போது **தெளிவான இலக்கத்தில்** எழுதவும்.
3. இலக்கங்களை எழுதும்போது பிழைகள் ஏற்பட்டால் அவற்றைத் தனிக்கோட்டினால் கீறிவிட்டு, மீண்டும் பக்கத்தில் சரியாக எழுதி, சிற்றொப்பத்தை இடவும்.
4. ஒவ்வொரு வினாவினதும் உபபகுதிகளின் விடைகளுக்காக பெற்றுக்கொண்ட புள்ளியை பதியும் போது அந்த வினாப்பகுதிகளின் இறுதியில் △ இன் உள் பதியவும். இறுதிப் புள்ளியை வினா இலக்கத்துடன் ☐ இன் உள் பின்னமாகப் பதியவும். புள்ளிகளைப் பதிவதற்கு பரீட்சகர்களுக்காக ஒதுக்கப்பட்ட நிரலை உபயோகிக்கவும்.

**உதாரணம் - வினா இல 03**

(i) ........................................................................ ✓

........................................................................

........................................................................



(ii) ........................................................................ ✓

........................................................................

........................................................................



(iii) ........................................................................ ✓

........................................................................



........................................................................

03 (i) $\frac{4}{5}$ + (ii) $\frac{3}{5}$ + (iii) $\frac{3}{5}$ = $\frac{10}{15}$

**பல்தேர்வு விடைத்தாள் (துளைத்தாள்)**

1. க.பொ.த.(உ. தர) மற்றும் தகவல் தொழிநுட்பப் பரீட்சைக்கான துளைத்தாள் திணைக்களத்தால் வழங்கப்படும். சரியாக துளையிடபட்டு அத்தாட்சிப்படுத்திய துளைத்தாள் தங்களுக்கு கிடைக்கப்பெறும். அத்தாட்சிப்படுத்திய துளைத்தாளைப் பயன்படுத்துவது பரீட்சகரின் கடமையாகும்.
2. அதன் பின்னர் விடைத்தாளை நன்கு பரிசீலித்துப் பார்க்கவும். ஏதாவது வினாவுக்கு, ஒரு விடைக்கும் அதிகமாக குறியிட்டிருந்தாலோ, ஒரு விடைக்காவது குறியிடப்படாமலிருந்தாலோ தெரிவுகளை வெட்டிவிடக்கூடியதாக கோடொன்றைக் கீறவும். சில வேளைகளில் பரீட்சார்த்தி முன்னர் குறிப்பிட்ட விடையை அழித்துவிட்டு வேறு விடைக்குக் குறியிட்டிருக்க முடியும். அவ்வாறு அழித்துள்ள போது நன்கு அழிக்காது விட்டிருந்தால், அவ்வாறு அழிக்கப்பட்ட தெரிவின் மீதும் கோடிடவும்.
3. துளைத்தாளை விடைத்தாளின் மீது சரியாக வைக்கவும். சரியான விடையை ✓ அடையாளத்தாலும் பிழையான விடையை O அடையாளத்தாலும் இறுதி நிரலில் அடையாளமிடவும். சரியான விடைகளின் எண்ணிக்கையை அவ்வவ் தெரிவுகளின் இறுதி நிரையின் கீழ் அத்துடன் அவற்றை கூட்டி சரியான புள்ளியை உரிய கட்டத்தில் எழுதவும்.

## கட்டமைப்பு கட்டுரை விடைத்தாள்கள்

1. பரீட்சார்த்திகளால் விடைத்தாளில் வெறுமையாக விடப்பட்டுள்ள இடங்களையும், பக்கங்களையும் குறுக்குக் கோடிட்டு வெட்டிவிடவும். பிழையான பொருத்தமற்ற விடைகளுக்குக் கீழ் கோடிடவும். புள்ளி வழங்கக்கூடிய இடங்களில் ✓ அடையாளமிட்டு அதனைக் காட்டவும்.

2. புள்ளிகளை ஓவலண்ட் கடதாசியின் இடது பக்கத்தில் குறிக்கவும்.

3. சகல வினாக்களுக்கும் கொடுத்த முழுப் புள்ளியை விடைத்தாளின் முன் பக்கத்திலுள்ள பொருத்தமான பெட்டியினுள் வினா இலக்கத்திற்கு நேராக 2 இலக்கங்களில் பதியவும். வினாத்தாளில் உள்ள அறிவுறுத்தலின் படி வினாக்கள் தெரிவு செய்யப்படல் வேண்டும். எல்லா வினாக்களினதும் புள்ளிகளும் முதல் பக்கத்தில் பதியப்பட்ட பின் விடைத்தாளில் மேலதிகமாக எழுதப்பட்டிருக்கும் விடைகளின் புள்ளிகளில் குறைவான புள்ளிகளை வெட்டி விடவும்.

4. மொத்த புள்ளிகளை கவனமாக கூட்டி முன் பக்கத்தில் உரிய கூட்டில் பதியவும். விடைத்தாளில் வழங்கப்பட்டுள்ள விடைகளுக்கான புள்ளியை மீண்டும் பரிசீலித்த பின் முன்னால் பதியவும். ஒவ்வொரு வினாக்களுக்கும் வழங்கப்படும் புள்ளிகளை உரிய விதத்தில் எழுதுவும்.

## புள்ளிப்பட்டியல் தயாரித்தல்

இம்முறை சகல பாடங்களுக்குமான இறுதிப்புள்ளி குழுவினுள் கணிப்பிடப்படமாட்டாது. இது தவிர ஒவ்வொரு வினாப் பத்திரத்துக்குமான இறுதிப்புள்ளி தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதியப்பட வேண்டும். வினாப்பத்திரம் I இற்குரிய புள்ளிப்பட்டியலில் "வினாப்பத்திரம் I" என்ற நிரலில் பதிந்து எழுத்திலும் எழுத வேண்டும். பகுதிப்புள்ளிகளை உள்ளடக்கி "வினாப்பத்திரம் II" எனும் நிரலில் வினாப்பத்திரம் II இற்குரிய இறுதிப்புள்ளியை பதிய வேண்டும். 51 சித்திரப் பாடத்திற்குரிய I, II, மற்றும் III ஆம் வினாப்பத்திரங்களுக்குரிய புள்ளிகளை தனித்தனியாக புள்ளிப்பட்டியலில் பதிந்து எழுத்திலும் எழுதுதல் வேண்டும்.

ooo

# புள்ளித் திட்டம் தயாரிப்பதற்கான அறிவுறுத்தல்கள்

- ஒவ்வொரு விண்ணப்பதாரிக்குமுரிய புள்ளிகள் பட்டியலின் வினா இலக்கங்களுக்கு ஏற்றதாக இடப்படுதல் வேண்டும்.

- வினா இலக்கத்திற்கு மேலாக

  - வினாவிற்குரிய மொத்தப்புள்ளிகளையும் குறிப்பிடுக.

  - புள்ளியைக் குறிப்பிடும்போது தெளிவாக இலக்கத்தைக் குறிக்கவும்.

  - புள்ளிகளைப் பதியும்போது தவறு நடந்தால் ஒரு கோட்டால் வெட்டி குறுகிய ஒப்பமிடுக

  - அழிறப்பர், டிபெக்ஸ் பயன்படுத்துதல் கூடாது.

  - புள்ளியைக் குறித்த, பரிசோதித்த இருவருமே புள்ளிப்பட்டியலில் கையொப்பமிட்டு குறியீட்டு இலக்கத்தையும் இடவும்.

## விடைத்தாள் புள்ளியிடல் தொடர்பான அறிவுறுத்தல்கள்

- விடைத்தாள்களைத் திருத்தும்போது சிவப்புப் பேனாவைப் பயன்படுத்தவும்.
- பரீட்சார்த்திகளின் விடைகளை நன்கு வாசித்து உரிய சரியான விடையுள்ள இடத்தில் (✓) அடையாளமிடவும்.
- ஒரு வினாவிற்குரிய உப பிரிவுகள் அனைத்துக்குமுரிய விடைகள் விடைத்தாளின் ஒரே இடத்தில் இல்லாவிடினும் விடையெழுதப்பட்ட இடத்தைத் தேடி புள்ளியிடுதல் அவசியமாகும்.
- சரியான விடையை அடையாளமிட்ட பின் அப்பகுதிக்குரிய புள்ளிகளை அப்பகுதியின் மொத்தப்புள்ளி அளவுக்கு விகிதத்திற்கு அதன் வலப்பக்கத்தில் இடவும்.

  உ + ம் $\frac{02}{03}$ , $\frac{01}{03}$

- விடையின் இறுதியில் வினா இலக்கத்திற்கு முன்னால் உபபிரிவுகளின் புள்ளிகளையும் குறிப்பிட்டு மொத்தப்புள்ளியின் விகிதமாகக் குறிக்கவும்.

  உ + ம் (i) $\frac{02}{03}$ (ii) $\frac{02}{04}$ (iii) $\frac{04}{06}$ (iv) $\frac{01}{07}$ = $\frac{08}{20}$

- புள்ளியிடும்போது பிழை ஏற்படுமாயின் அப்புள்ளியை ஒரு தனிக்கோட்டால் வெட்டி மீண்டும் தெளிவாகக் குறிப்பிட்டு சுருக்கக் கையொப்பமிடுக.
- விடைத்தாள் மதிப்பீட்டின் இறுதியில் ஒவ்வொரு வினாவிற்கும் பரீட்சார்த்திகள் பெற்ற புள்ளிகளை உரிய வினா இலக்கத்திற்கு முன்னால் குறிப்பிட்டு மொத்தக் கூட்டுத்தொகையையும் குறிக்க. வலப்பக்கமுள்ள பகுதியையும் உரிய முறையில் பூரணப்படுத்துக

## முதலாம் வினாத்தாளின் குறிக்கோள்கள்

- பல்தேர்வு வினாக்கள் 50 ஐக் கொண்ட இவ்வினாத்தாள் மனைப்பொருளியல் பாடப் பரப்பிற்குரிய தேர்ச்சிகள் அனைத்தும் உள்ளடங்குமாறு தயாரிக்கப்பட்டுள்ளது.

- இங்கு வினா இலக்கம் 01 தொடக்கம் 07 வரையான வினாக்கள் அடங்கியுள்ள மனை முகாமைத்துவத்துடன் தொடர்புடையவை. இவ்வினாக்களில் 1,09, 14 தேர்ச்சி மட்டம் ஆகியவற்றிற்குரிய விடய உள்ளடக்கங்கள் தொடர்பான அறிவு, விளக்கம், பயன்பாடு, மட்டுமன்றி உயர் உளத் திறன்களைத் தொகுத்தல், பகுத்தல், மதிப்பிடல் தொடர்பாக அளவிடுமாறு தயாரிக்கப்பட்டுள்ளது. அவர்களில் வளர்த்தெடுக்கப்பட்டுள்ள செய்முறைத் திறன்களை மதிப்பிடல் இங்கு இடம் பெறுகிறது.

- வினா இலக்கம் 08 தொடக்கம் 34 வரையான வினாக்கள் உணவும் போசணையும் துறைக்குரிய தேர்ச்சிகளின் விடய உள்ளடக்கங்களில் இருந்து தயாரிக்கப்பட்டுள்ளது. இவை 2,3,4,5,6,7,8 ஆகிய தேர்ச்சி மட்டங்களில் இருந்து வினாக்கள் தயாரிக்கப்பட்டுள்ளன. இங்கு பரீட்சார்த்திகளில் அறிவு, விளக்கம், பயன்பாடு, உயர் உளத் திறன்கள், செயன்முறைத் திறன்கள் என்பவற்றை வளர்க்குமாறு அமைக்கப்பட்டுள்ளது.

- பிள்ளை விருத்தித் துறைக்குரிய விடயங்களின் அறிவு திறன் தொடர்பாக மதிப்பிடலை அடிப்படையாகக் கொண்டு 35-42 வரையான வினாக்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

- புடவையும் உடையமைத்தலும் விடயத் துறைக்குரிய விடயங்களில் தயாரிக்கப்பட்டுள்ள 43 முதல் 50 வரையான வினாக்களில் தேர்ச்சி மட்டம் உள்ளடக்கப்பட்டுள்ளன.

# இரண்டாம் வினாத்தாளின் குறிக்கோள்கள்

**1 ஆம் வினா**

- 1ம் வினா கட்டாய வினாவாகும். இது 5 பிரிவுகளைக் கொண்டது I,II,III என்பன மனைமுகாமைத்துடன் தொடர்புபட்டது. அறிவு, விளக்கம், தொகுப்பு, உளத்திறன் மட்டுமின்றி செய்முறைத் திறனையும் அளவிடுமாறு தயாரிக்கப்பட்டுள்ளது. IV பகுதி புடவையும் உடை அமைத்தலுக்குமுரிய தேர்ச்சிகளை உள்ளடங்கியது.

**2ம் வினா**

- புடைவையும் உடையமைத்தலுக்குரிய 10,11 தேர்ச்சி மட்டத்துக்குரிய அறிவு, விளக்கம், பயன்பாடு என்பவற்றை அளவிடுமாறு தயாரிக்கப்பட்டுள்ளது.

**3ம் வினா**

- மனைநிர்வாகத்தில் 1-9 வரையான தேர்ச்சி மட்டத்துக்குரிய விடய உள்ளடக்கத்தை அளவிடுமாறு தயாரிக்கப்பட்டுள்ளது.

**4ம் வினா**

- மனை நிர்வாகம், புடைவையும், உடையமைத்தலும் தேர்ச்சி மட்டத்தை அளவிடுமாறு தயாரிக்கப்பட்டுள்ளது.

**5ம் வினா**

- I,I,III பகுதிகள் உணவு வேளைத் திட்டமிடலின் தேர்ச்சி மட்டத்துக்குரிய விடயங்களை அளவிடுமாறு IV, V என்பன பிள்ளை விருத்தியில் தேர்ச்சியில் உள்ளடக்கப்பட்டுள்ளது.

**6ம் வினா**

- பிள்ளை விருத்திக்குரிய தேர்ச்சி மட்டத்துக்குரிய விடய உள்ளடக்கங்களை அளவிடுமாறு தயாரிக்கப்பட்டுள்ளது.

**7ம் வினா**

- இதன் I ம் பிரிவு 2.8 தேர்ச்சி மட்டத்திற்குரிய விடயங்களை II ம் பிரிவு உணவுத் தொகுதிகளுக்குரிய 2.1 தேர்ச்சி மட்டத்துக்குரியதாகவும் தயாரிக்கப்பட்டுள்ளது. பிரிவின் III இன் a,b,c பகுதிகள் 3.7, 5.3 தேர்ச்சி மட்டங்களுக்குரிய செயன்முறைத் திறனை அளவிடுமாறு தயாரிக்கப்பட்டுள்ளது.

**8ம் வினா**

- உணவும் போசணையும் பகுதியில் மட்டங்களுக்குரிய செயன்முறைத் திறன்களை அளவிடுதல் எதிர்பார்க்கப்படுகிறது.

**9ம் வினா**

- உணவு போசணை பிள்ளை விருத்தியில் தேர்ச்சி மட்டத்திற்குரிய விடய உள்ளடக்கங்களை மதிப்பிடுமாறு உள்ளடக்கப்பட்டுள்ளது.

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம் இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka Department of Examinations, Sri Lanka

**கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2018 ஓகஸ்ற்**
**General Certificate of Education (Adv. Level) Examination, August 2018**

21.08.2018 / 0830 - 1030

ගෘහ ආර්ථික විද්‍යාව I
மனைப் பொருளியல் I
Home Economics I

28 T I

පැය දෙකයි
இரண்டு மணித்தியாலம்
*Two hours*

**அறிவுறுத்தல்கள் :**

* **எல்லா** வினாக்களுக்கும் விடை எழுதுக.
* விடைத்தாளில் தரப்பட்டுள்ள இடத்தில் உமது **சுட்டெண்ணை** எழுதுக.
* கணிப்பானைப் **பயன்படுத்தக்கூடாது.**
* விடைத்தாளின் மறுபக்கத்தில் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களைக் கவனமாக வாசித்துப் பின்பற்றுக.
* **1** தொடக்கம் **50** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் (1), (2), (3), (4), (5) என இலக்கமிடப்பட்ட விடைகளில் **சரியான** அல்லது **மிகப் பொருத்தமான** விடையைத் தெரிந்தெடுத்து, **அதனைக் குறித்து நிற்கும் இலக்கத்தைத் தரப்பட்டுள்ள அறிவுறுத்தல்களுக்கு அமைய** விடைத்தாளில் **புள்ளடி** (×) இடுவதன் மூலம் காட்டுக.

1. நிறங்கள் மூலம் பல்வேறு உணர்வுகள் தூண்டப்படும். சிவப்பு நிறத்தின் மூலம் தூண்டப்படும் இரு உணர்வுகள்
 (1) வெப்பமான தன்மையும் செயற்படு தன்மையும்
 (2) பின்னடையும் தன்மையும் வெப்பமான தன்மையும்
 (3) முன்கொணரும் தன்மையும் சிறியதாகக் காட்டும் தன்மையும்
 (4) செயற்படு தன்மையும் பாரமான தன்மையும்
 (5) பின்னடையும் தன்மையும் சிறியதாகக் காட்டும் தன்மையும்

2. அறையொன்றிற்கு நிறம் பயன்படுத்தப்பட்டுள்ள விதம் பின்வருமாறு காட்டப்பட்டுள்ளது.

| | | | |
|---|---|---|---|
| பாவு (சிவிலின்) - | வெள்ளை | திரைச்சீலை - | ஊதா மற்றும் இளம் கபில நிறம் |
| சுவர் - | இளம் பச்சை | தளபாட மேலுறைகள் - | இளம் ஊதா |
| தரை - | வெள்ளை | மலர் ஒழுங்கு - | கடும் பச்சை மற்றும் செம்மஞ்சள் |

 இவ்வறைக்குப் பயன்படுத்தியுள்ள நிறச் சேர்மானம்/நிறத்திட்டம்
 (1) இணைந்த நிற இசைவு
 (2) மிகை நிரப்பு நிற இசைவு
 (3) பிரிப்பு மிகை நிரப்பு நிற இசைவு
 (4) இரட்டை மிகை நிரப்பு நிற இசைவு
 (5) மும்மை நிற இசைவு

3. மனையொன்றில் காணப்பட்ட இரண்டு பண்புகள் கீழே தரப்பட்டுள்ளன.
 - மாடிப் படிகள்
 - சதுரமான தரை ஓடுகள் (Floor tiles) பதிக்கப்பட்டுள்ளன.

 இவ்விரு பண்புகளின் அடிப்படையில் சந்தம் வெளிக்காட்டப்படும் இரண்டு விதங்கள் முறையே
 (1) மீளுதலும் எதிர்ப்பும்
 (2) எதிர்ப்பும் நிலைமாறுகையும்
 (3) நிலைமாறுகையும் எதிர்ப்பும்
 (4) எதிர்ப்பும் மீளுதலும்
 (5) மீளுதலும் நிலைமாறுகையும்

4. பின்வருவனவற்றில் சமூக வளங்களை மாத்திரம் கொண்ட விடையைத் தெரிவுசெய்க.
 (1) தபால் காரியாலயம், காணிகள், வீடுகள்
 (2) புகையிரத நிலையம், நூலகம், விளையாட்டு மைதானம்
 (3) காணிகள், திரையரங்கு, தபால் காரியாலயம்
 (4) நூலகம், கட்டடங்கள், வீடுகள்
 (5) விளையாட்டு மைதானம், புகையிரத நிலையம், கட்டடங்கள்

5. பின்வருவனவற்றுள் நீர்க் கட்டணம் தொடர்பான **பிழையான** கூற்று எது ?
   (1) முதல் 15 அலகுகளும் சலுகைக் கட்டணத்தில் வழங்கப்படும்.
   (2) நீரைப் பயன்படுத்தும்போது செலவாகும் அலகுகளுக்கேற்ப செலுத்தப்பட **வேண்டிய கட்டணம்** தீர்மானிக்கப்படும்.
   (3) நீர் அலகொன்றுக்கான கட்டணம் விசேட சேவைகளின் தேவைக்கமைய வேறுபடும்.
   (4) சகல விலைப் பட்டியலுக்கும் நிலையான மாதாந்தக் கட்டணமொன்று அறவிடப்படும்.
   (5) நீர்க் கட்டணச் சிட்டையில் அலகொன்றாகக் கருதப்படுவது 100 லீற்றர் நீராகும்.

6. பிரதான மின் வழங்கலிலிருந்து மனைக்கான மின்சுற்றுக்குக் கிடைக்கும் மின்னை இணைத்தல் அல்லது துண்டித்தல் பின்வரும் எந்த உபகரணம் மூலம் மேற்கொள்ளப்படும் ?
   (1) இடறு ஆளி (2) உருகி (3) பிரதான ஆளி
   (4) சேவைமானி (5) நுண் சுற்றுடைப்பான்

7. மின் கேத்தலொன்றின் வலு 750 W ஆகும். அதனை அரை மணித்தியாலம் பயன்படுத்தும்போது விரயமாகும் மின் சக்தியின் அளவு கிலோவாற்று மணித்தியாலங்களில்
   (1) 0.375 (2) 0.650 (3) 0.750 (4) 1.500 (5) 1.650

8. $C_{12}H_{22}O_{11}$ என்னும் மூலக்கூற்றுச் சூத்திரத்தைக் கொண்ட காபோவைதரேற்று
   (1) அமைலோசு (2) செலுலோசு (3) குளுக்கோசு (4) கலக்றோசு (5) மோல்ரோசு

9. சுக்குரோசை இனங்காணும் இரசாயனச் சோதனைக்காகத் தேவைப்படும் சோதனைப் பொருள்கள் எவை?
   (1) அயடீன், ஐதான சல்பூரிக் அமிலம்
   (2) அயடீன், பொற்றாசியம் ஐதரொட்சைட்டு
   (3) ஐதான சல்பூரிக் அமிலம், பீலிங்கின் A மற்றும் B கரைசல்
   (4) பொற்றாசியம் ஐதரொட்சைட்டு, பீலிங்கின் A மற்றும் B கரைசல்
   (5) செறிந்த நைத்திரிக் அமிலம், அயடீன்

10. உடலினுள் நீரில் கரையக்கூடிய நார்ப்பொருளின் தொழிற்பாடாவது
   (1) சுற்றுச்சுருங்கல் அசைவை அதிகரிக்கும்.
   (2) கொலஸ்ரோல் உறிஞ்சப்படுவதைத் தடைசெய்யும்.
   (3) மலத்தின் அளவை அதிகரிக்கும்.
   (4) குடல் நுண்ணுயிர்களுக்கு வளர்ப்பூடகத்தை வழங்கும்.
   (5) மலச்சிக்கலைத் தடுக்கும்.

11. பின்வருவனவற்றுள் அத்தியாவசியமான இரண்டு அமினோ அமிலங்களாவன
   (1) வலின் மற்றும் சிஸ்டய்ன் (2) மெத்தியோனின் மற்றும் லைசீன்
   (3) சிஸ்டின் மற்றும் திரியோனின் (4) ரைரோசின் மற்றும் லியூசின்
   (5) கிளைசின் மற்றும் ஐசோலியூசின்

12. இணைந்த புரதங்கள் இரண்டாவன
   (1) ஹிமோகுளோபின் மற்றும் லிபோ புரதம் (2) பொசுப்போ புரதம் மற்றும் பொலிபெப்ரைட்டு
   (3) லிபோ புரதம் மற்றும் டைபெப்ரைட்டு (4) ஹிமோகுளோபின் மற்றும் பொலிபெப்ரைட்டு
   (5) பொசுப்போ புரதம் மற்றும் டைபெப்ரைட்டு

13. ஒமேகா - 6 கொழுப்பமிலங்களாவன
   (1) லினோலெனிக் அமிலம் மற்றும் அரக்கிடோனிக் அமிலம்
   (2) அரக்கிடோனிக் அமிலம் மற்றும் ஒலேயிக் அமிலம்
   (3) லினோலெனிக் அமிலம் மற்றும் லினோலெய்க் அமிலம்
   (4) ஒலேயிக் அமிலம் மற்றும் லினோலெய்க் அமிலம்
   (5) லினோலெய்க் அமிலம் மற்றும் அரக்கிடோனிக் அமிலம்

14. இரண்டு ஒட்சியெதிரிகள்
   (1) மகனீசியம், விற்றமின் C (2) செலேனியம், விற்றமின் D
   (3) மகனீசியம், விற்றமின் A (4) செலேனியம், விற்றமின் E
   (5) விற்றமின் E, விற்றமின் D

15. அயடீன் குறைபாட்டின் நோய் அறிகுறியாவது
   (1) தலைமுடியின் நிறம் மாற்றமடைதல் (2) குருதி உறைதல் தாமதமாதல்
   (3) கீளோசிஸ் (4) வளர்ச்சி குன்றல்
   (5) மயக்க நிலை

**16.** உடலுக்குத் தேவையான நுண் போசணைப் பொருள்கள் தொடர்பான சில விடயங்கள் கீழே தரப்பட்டுள்ளன.
- அமில கார சமநிலை
- குருதியமுக்கம்
- வாந்தியும் வயிற்றுப்போக்கும்
- தசைப்பிடிப்பு/கெண்டை பிரளுதல்

மேற்படி விடயங்கள் தொடர்பில் செல்வாக்குச் செலுத்தும் இரண்டு நுண் போசணைப் பொருள்கள்
(1) மகனீசியம், நாகம்
(2) இரும்பு, கல்சியம்
(3) சோடியம், பொற்றாசியம்
(4) செம்பு, சோடியம்
(5) மகனீசியம், பொற்றாசியம்

**17.** குருதிச்சோகைக்கு **ஏதுவாகாதது**
(1) போலிக் அமிலக் குறைபாடு
(2) விற்றமின் C குறைபாடு
(3) விற்றமின் $B_{12}$ குறைபாடு
(4) செம்பு குறைபாடு
(5) பொசுபரசு குறைபாடு

**18.** B தொகுதிக்குள் உள்ளடங்கும் ஒரு விற்றமின்
(1) இனொஸிடோல்
(2) ரெடினோல்
(3) டொகோபெரோல்
(4) கொலிகல்ஸிபரோல்
(5) நப்தாகுவினோன்

**19.** பின்வருவனவற்றுள் எந்த விற்றமின்களின் குறைபாட்டினால் செரொப்தல்மியா மற்றும் கெரட்டோமலேசியா எனும் நிலைமைகள் வெளிக்காட்டப்படும் ?
(1) விற்றமின் A (2) விற்றமின் $B_1$ (3) விற்றமின் $B_2$ (4) விற்றமின் C (5) விற்றமின் D

**20.** சிபாரிசு செய்யப்பட்ட நாளாந்த போசணைத் தேவை அட்டவணை (2007) இற்கு அமைவாக புரதத் தேவை தொடர்பான சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) பிள்ளைப் பருவத்தில் இத்தேவை மாற்றமடையாது காணப்படும்.
(2) கட்டிளமைப் பருவத்தில் பெண்களை விட ஆண்களுக்கான இத்தேவை அதிகமானது.
(3) வயோதிபப் பருவத்தில் இதன் தேவை ஆண், பெண் இரு சாராருக்கும் சமனாகக் காணப்படும்.
(4) கர்ப்ப காலத்தில் இரண்டாம், மூன்றாம் மும்மாதங்களில் இதன் தேவை சமனாகக் காணப்படும்.
(5) பாலூட்டும் காலத்தில் முதலாவது வருடத்தில் இதன் தேவை படிப்படியாக அதிகரிக்கும்.

**21.** குளுற்றன், கொலாஜன் மற்றும் ஒவோவிட்டலின் எனும் புரதச் சத்துகள் அடங்கிய உணவு வகைகளாவன முறையே
(1) சோறு, இறைச்சி, ஈரல்
(2) கோதுமை, மீன், பால்
(3) சோறு, இறைச்சி, முட்டை
(4) கோதுமை, மீன், முட்டை
(5) சோளம், ஈரல், பால்

**22.** அதன் உள்ளடக்கத்தில் விற்றமின் C உம் பெக்ரின் உம் அதிகளவு அடங்கிய உணவுப் பொருளாவது
(1) பயறு (2) போஞ்சி (3) விளாம்பழம் (4) தர்ப்பூசணி (5) கோவா

**23.** ஆழமான எண்ணெயில் பொரிப்பதற்காக மிகப் பொருத்தமான எண்ணெய் வகை எது ?
(1) ஒலிவ் எண்ணெய்
(2) சோயா எண்ணெய்
(3) மரக்கறி எண்ணெய்
(4) சூரியகாந்தி எண்ணெய்
(5) தேங்காய் எண்ணெய்

**24.** குடற்சாற்றில் அடங்கியுள்ள காபோவைதரேற்றுச் சமிபாட்டுக்கான இரு நொதியங்களாவன
(1) பெப்ரிடேசு மற்றும் லக்டேசு
(2) மோல்ரேசு மற்றும் இலிப்பேசு
(3) சுக்குரேசு மற்றும் இலிப்பேசு
(4) பெப்ரிடேசு மற்றும் மோல்ரேசு
(5) சுக்குரேசு மற்றும் லக்டேசு

**25.** போசணைச் சத்து அகத்துறிஞ்சல் தொடர்பான பின்வரும் கூற்றுகளில் சரியானதைத் தெரிவுசெய்க.
(1) பெரும்பாலும் விற்றமின்கள் சிறுகுடலின் கடைசிப் பகுதியில் அகத்துறிஞ்சப்படுகின்றன.
(2) உணவின் அமிலத்தன்மையானது கல்சியம் அகத்துறிஞ்சலை அதிகரிக்கின்றது.
(3) இன்சுலின் ஓமோன், இரும்பு அகத்துறிஞ்சலைத் தடைசெய்கின்றது.
(4) உணவில் காணப்படும் நீரில் அதிகமான வீதம் பெருங்குடலில் அகத்துறிஞ்சப்படுகின்றது.
(5) சடைமுளைகளில் கொழுப்பில் கரையக்கூடிய விற்றமின்கள் குருதிக்குள் அகத்துறிஞ்சப்படுகின்றது.

**26.** போசணைப் பொருள்களின் அனுசேபம் தொடர்பான சரியான கூற்றைத் தெரிவுசெய்க.
(1) கிரெப்பின் வட்டத்தின்போது சக்தி, நீர், ஒட்சிசன் ஆகியன உற்பத்தியாக்கப்படுகின்றன.
(2) கீற்றோன் உடல்கள் புரத அனுசேபத்தின்போது உற்பத்தியாகும்.
(3) கிளைக்கோ பகுப்பின் இறுதியில் பைருவிக் அமிலம் உருவாகும்.
(4) கொழுப்பு அனுசேபத்தின்போது யூரியா உற்பத்தியாகும்.
(5) புரத அனுசேபத்தின்போது சிறுநீரகத்திற்குள் அமீனகற்றல் இடம்பெறும்.

**27.** உணவு நஞ்சாதலை ஏற்படுத்தும் ஒரு பக்றீரியா இனமானது
(1) ஹெலிகோபக்ரர் பைலோரா (*Helicobacter pylora*)
(2) இலக்டோபசிலஸ் அஸிடோபிலஸ் (*Lactobacillus acidophillus*)
(3) ஸ்ரெப்ரோகொக்கஸ் இலக்ரிஸ் (*Streptococcus lactis*)
(4) குளொஸ்றிடியம் பொடியுலினம் (*Clostridium botulinum*)
(5) அஸிரோபக்ரர் அசிரய் (*Acetobacter aceti*)

**28.** பின்வரும் எந்த உணவிற்கான நற்காப்புக் காரணியாக சோடியம் பென்சோவேற்று பாவிக்கப்படுகிறது ?
(1) மாசுமெலோசு (2) பாகற்காய் வற்றல்
(3) பாகிடப்பட்ட பூசணி (4) அன்னாசி ஜாம்
(5) எலுமிச்சை ஊறுகாய்

**29.** உணவுகளை நற்காப்புச் செய்தல் தொடர்பான கூற்றுகள் சில கீழே தரப்பட்டுள்ளன.
*A* - பலாக்காயை உலர வைக்கும்போது நீரகற்றல் இடம்பெறும்.
*B* - நற்காப்புக்குப் பயன்படுத்தும் சீனி ஒரு சேதனச் சேர்வையாகும்.
*C* - இனிப்பு (ரொபி) தயாரிப்பின்போது கலவையின் pH பெறுமானம் குறைவடையும்.
*D* - ஜாம் (பழப்பாகு) தயாரிப்பின்போது கலவையின் செறிவு அதிகரிக்கும்.
இவற்றுள் சரியான கூற்றுகளாவன
(1) *A* யும் *B* யும் (2) *B* யும் *C* யும்
(3) *B* யும் *D* யும் (4) *A*, *B* மற்றும் *C*
(5) *A*, *B* மற்றும் *D*

**30.** எதைல் மதுசாரம் பின்வரும் எந்த உணவுத் தயாரிப்பின்போது உருவாகின்றது ?
(1) பான் கேக் (2) இக்லியாஸ் (3) பனிஸ்
(4) பற்றிஸ் (5) பட்டர் கேக்

**31.** உணவுப் பொருள்களைப் பொதியிடலுக்காகப் பயன்படுத்தப்படும் விறைத்த (தடித்த), அரை விறைத்த பொதியிடு பதார்த்தங்களுக்கான இரு உதாரணங்களாவன முறையே
(1) காட்போட், அலுமினிய தாள் (2) உலோகம், அலுமினிய தாள்
(3) கண்ணாடி, தடித்த பிளாத்திக்கு (4) தடித்த பிளாத்திக்கு, உலோகம்
(5) காட்போட், கண்ணாடி

**32.** இலக்டோபசிலசு பல்கரிகசு பக்றீரியா தேவைப்படுவது பின்வரும் எந்த உணவுத் தயாரிப்பின்போதாகும் ?
(1) யோகட் (2) பாற்கட்டி (3) தயிர்
(4) நெய் (5) பட்டர்

**33.** ஸ்ரு செய்தல் தொடர்பான **தவறான** கூற்று யாது ?
(1) சமைத்தலுக்கு அதிக நேரம் தேவைப்படுகின்றது.
(2) போசணை அதிகளவில் இழக்கப்படுகின்றது.
(3) சமைத்தலின்போது பல உணவுப்பொருள்களைக் கலப்பதற்கு இயலுமாயிருக்கும்.
(4) மூடியால் மூடியவாறாக சமைத்தல் இடம்பெறல் வேண்டும்.
(5) தடிப்பாக்குவதற்காக சோள மா (Corn flour) பயன்படுத்தப்படுகின்றது.

**34.** கேக் வகையொன்று பேக் செய்த பின்னர் அதன் நடுப் பகுதி கீழிறங்கிக் காணப்பட்டது. இதற்குக் காரணமாக அமையக்கூடியது
(1) குறைந்தளவான நொதிக்கவைக்கும் பதார்த்தம் பயன்படுத்தப்பட்டமை
(2) முட்டை கூடியளவு இடப்பட்டமை
(3) சேர்வைப் பொருள்கள் நன்றாகக் கலக்கப்படாமை
(4) கனலடுப்பை அடிக்கடி திறந்து பார்த்தமை
(5) கனலடுப்பின் வெப்பநிலை அதிகரித்துக் காணப்பட்டமை

**35.** கட்டிளமைப்பருவ பெண் பிள்ளையில் பெண் இனப்பெருக்க ஓமோன் உற்பத்தியாக்கப்படுவது
(1) கபச் சுரப்பியில் (2) அதிரினல் சுரப்பியில் (3) சூலகங்களில்
(4) கருப்பையில் (5) பலோப்பியன் குழாய்களில்

**36.** கர்ப்ப காலம் பொதுவாக
(1) 250 நாட்களாகும். (2) 260 நாட்களாகும். (3) 270 நாட்களாகும்.
(4) 280 நாட்களாகும். (5) 300 நாட்களாகும்.

**37.** பின்வருவனவற்றுள் கர்ப்ப காலம் தொடர்பான **பிழையான** கூற்று எது ?
(1) காலையில் குமட்டலும் வாந்தியும் ஏற்படலாம்.
(2) தாய்ப்பால் உற்பத்தி ஆரம்பிக்கும்.
(3) கால்களில் வீக்கம் காணப்படலாம்.
(4) நீரிழிவினால் பாதிக்கப்படுவதற்கான சந்தர்ப்பம் உள்ளது.
(5) அதிகமான நிறை அதிகரிப்பு இரண்டாவது மும்மாதத்தினுள் காட்டப்படும்.

**38.** வாழ்க்கை வட்டத்தில் துரிதமான உடல் மற்றும் இயக்க விருத்தி காணப்படும் பருவங்கள் இரண்டு
(1) குழந்தைப் பருவமும் முன் பிள்ளைப் பருவமும்
(2) முன் பிள்ளைப் பருவமும் பின் பிள்ளைப் பருவமும்
(3) பின் பிள்ளைப் பருவமும் கட்டிளமைப் பருவமும்
(4) குழந்தைப் பருவமும் கட்டிளமைப் பருவமும்
(5) முன் பிள்ளைப் பருவமும் கட்டிளமைப் பருவமும்

**39.** தேசிய நோயெதிர்ப்பு வேலைத்திட்டம் (2007) இற்கு ஏற்ப ஐவகைக் கூட்டு (Pentavalent) வக்சீனின் 4 ஆவது பகுதி, பிள்ளைக்கு எத்தனையாவது வயது நிரம்பியவுடன் வழங்கப்படுகின்றது ?
(1) 6 மாதம் (2) 9 மாதம் (3) 12 மாதம் (4) 18 மாதம் (5) 3 வருடங்கள்

**40.** பின் பிள்ளைப்பருவப் பிள்ளையொன்றிடம் காணக்கூடிய குணாம்சமாவது
(1) குழுவாகச் செயற்படுதலில் ஆர்வம்
(2) எண்ணக்கருவாக்கம் உயர்மட்டத்தில் காணப்படல்
(3) பிரச்சினை தீர்ப்பதில் ஈடுபடுதல்
(4) மனவெழுச்சிகளைத் தீவிரமாக வெளிப்படுத்துதல்
(5) பகற் கனவு காணல்

**41.** பின்வரும் நோய்களுள் பின் பிள்ளைப்பருவப் பிள்ளைக்கு வழங்கப்படும் தடுப்பு மருந்து மூலம் தவிர்க்கப்படும் நோய் எது ?
(1) கூகைக்கட்டு (2) சின்னமுத்து (3) போலியோ (4) ருபெல்லா (5) குக்கல்

**42.** கீழே தரப்பட்டுள்ள நடத்தைகளில் கட்டிளமைப்பருவத்தில் ஆலோசனை தேவைப்படும் நடத்தை யாது ?
(1) மற்றவர்களிலும் எடுத்துக்காட்டக்கூடியவராக இருப்பதில் ஆர்வம் காட்டுவார்.
(2) ஆக்ரோசமான நடத்தைகளைக் காட்டுவார்.
(3) சுயமாக முடிவுகளை எடுக்க முற்படுவார்.
(4) பெற்றோருடன் தர்க்கிப்பார்.
(5) வயதுவந்தோரின் தலையீட்டை விரும்பமாட்டார்.

**43.**


*A*


*B*

மேலே *A* மற்றும் *B* வரிப்படங்களில் ஒழுங்குமுறையில் காட்டப்படுவன
(1) நீள் குறுந் தையல், முறுக்குவடத் தையல்
(2) ஜேர்மன் முடிச்சுத் தையல் மற்றும் ரோமேனியன் தையல்
(3) ரோமேனியன் தையல் மற்றும் நீள் குறுந் தையல்
(4) ஜேர்மன் முடிச்சுத் தையல் மற்றும் முறுக்குவடத் தையல்
(5) முறுக்குவடத் தையல் மற்றும் நீள் குறுந் தையல்

**44.** பின்வரும் கூற்றுகளில் சரியான கூற்று எது ?

(1) முன்னாயத்தத்தின்போது துணி நீரில் ஊறவைக்கப்பட்டு நன்றாகப் பிழிந்தப் பின்பு உலர விடப்பட வேண்டும்.
(2) ஐதான அமிலங்களினால் கம்பளி நார்களுக்குப் பாதிப்பு ஏற்படுவதில்லை.
(3) சரிவுக்கோட்டு நெசவு முறையில் நெய்யப்பட்ட துணிகள் வலிமை குறைவானவை.
(4) அலங்காரத் தையல் வேலையின்போது துணியின் மேற்பரப்பில் காட்டுருவைப் பிரதிசெய்து தைப்பதன் மூலம் நல்ல நேர்த்தியைப் பெற்றுக்கொள்ள முடியும்.
(5) கொதிநீரில் அமிழ்த்தி வைப்பதன் மூலம் பட்டுத்துணிகளைச் சுத்தம் செய்யலாம்.

**45.** துணி தயாரிப்பதற்காகப் பயன்படுத்தப்படும் நார் வகைகளின் பண்புகள் சில பின்வருவமாறு:

*A* - நிறையேற்றப்படலாம்.
*B* - தீயில் பிடித்தால் உருகும்.
*C* - நெகிழ்வுத்தன்மை அதிகம்
*D* - நார்களுக்குள் வளியை அடைத்து வைக்கலாம்.
*E* - சலவைப் பொருட்களில் காணப்படும் காரப் பொருள்களினால் பாதிப்பு ஏற்பட மாட்டாது.

இவற்றுள் நைலோன் நாரின் பண்புகளாவன

(1) *A*, *B* மற்றும் *C* ஆகும்.
(2) *A*, *D* மற்றும் *E* ஆகும்.
(3) *B*, *C* மற்றும் *D* ஆகும்.
(4) *B*, *C* மற்றும் *E* ஆகும்.
(5) *C*, *D* மற்றும் *E* ஆகும்.

**46.** தெறியோட்டையொன்றின் வெட்டப்பட்ட முனைகள் மற்றும் தடைமுனைகள் ஆகியவற்றைப் பூர்த்தியாக்குவதற்காகப் பயன்படுத்தப்படும் தையல் முறைகள் முறையே

(1) வெட்டுக்குத்துத் தையல் மற்றும் மீன்முள்ளுத் தையல்
(2) கம்பளித் தையல் மற்றும் தெறியோட்டைத் தையல்
(3) மீன்முள்ளுத் தையல் மற்றும் வெட்டுக்குத்துத் தையல்
(4) தெறியோட்டைத் தையல் மற்றும் கம்பளித் தையல்
(5) மீன்முள்ளுத் தையல் மற்றும் கம்பளித் தையல்

**47.** கீழே தரப்பட்ட வரிப்படங்களில் ஒரு சேலை ரவிக்கை வெட்டுவதற்கான மாதிரியுருவின் பாகங்கள் எவ்வரிப்படத்தில் சரியாக ஒழுங்குபடுத்திக் காட்டப்பட்டுள்ளது ?



(1)



(2)



(3)



(4)



(5)

**48.** பின்வருவன ஒரு மாணவனின் குறிப்பிலிருந்து பெறப்பட்ட சில கூற்றுகளாகும்.

*A* - சில்லுக் கோடு எனப்படுவது அடிப்படை மாதிரியுருவில் இடப்பட வேண்டிய ஓர் அடையாள வகையாகும்.

*B* - வெண்கட்டி மற்றும் பவுடர் என்பன கறை நீக்குவதற்காகப் பாவிக்கப்படும் உறிஞ்சிகளாகும்.

*C* - உடற்பகுதியின் அடிப்படை மாதிரியுருவை நிர்மாணிப்பதற்கு மார்பளவைக் கணிக்கும்போது இளக்க இடைவெளிக்காக ஐந்து சென்ரிமீற்றர் சேர்த்துக் கொள்ளப்பட வேண்டும்.

*D* - 12% கோஸ்டிக் சோடாக் கரைசலில் ஊற வைக்கும்போது பருத்தி நாரின் கட்டமைப்பு மாறுகின்றது.

*E* - மேசைவிரிப்பின் வளைவான ஓரங்களை நேர்த்தியாக்கும்போது ஒரு நேர்ப்பட்டி இணைக்கப்பட்டு முழுமையாகப் பின்பக்கத்திற்குத் திருப்பி மடித்து தைக்கப்படல் வேண்டும்.

இவற்றுள் சரியான கூற்றுகளாக அமைவன

(1) *A*, *B* மற்றும் *D*
(2) *A*, *C* மற்றும் *E*
(3) *B*, *C* மற்றும் *D*
(4) *B*, *D* மற்றும் *E*
(5) *C*, *D* மற்றும் *E*

**49.** புடைவைத் தொழிநுட்பம் தொடர்பாக மாணவரொருவரினால் எழுதப்பட்ட கூற்றுகள் சில கீழே தரப்பட்டுள்ளன. இதில் **பிழையான** கூற்று எது ?

(1) இல்லத்துணியணிகளின் விளிம்பு நேர்த்திக்காக கரையலங்காரம் பயன்படுத்தப்படும்.
(2) 'சுருங்காமல் செய்தலுக்கு உட்படுத்தப்பட்டுள்ளது' எனக் குறிப்பிடப்பட்டுள்ள துணிகள் சலவை செய்யும்போது 1% இலும் அதிகமாகச் சுருங்க மாட்டாது.
(3) துணிச் சலவைக்காகப் பயன்படுத்தும் சவர்க்காரத்தில் TFM சதவீதம் குறைவாகக் காணப்படும்.
(4) ஆடைகளில் உள்ள அழுக்குத் துணிக்கைகளை அகற்றுவதற்குப் பயன்படுத்தப்படும் சோதனைப் பொருள்கள் மேற்பரப்புச் செயற்பாட்டுக் காரணிகள் எனப்படும்.
(5) வீட்டுத் துணிகளைத் தூய்மையாக்குவதற்கு சவர்க்காரம் சேர்க்கப்பட்ட நீரில் நீண்ட நேரம் ஊற வைப்பது சிறப்பாகும்.

**50.** புடைவைக்கு விறைப்பூட்டல் தொடர்பான சரியான கூற்று எது ?

(1) புடைவைகளை வெண்மையாக்குவதோடு உறிஞ்சல் தன்மையை அதிகரிக்கும்.
(2) வலிமையையும் பிரகாசத்தையும் தரும்.
(3) புடைவையில் உள்ள கறைகள் யாவும் நீக்கப்படும்.
(4) நார்களுக்கு மேற்பூச்சாகத் தொழிற்படுவதுடன் நிலைமின்னியலைக் குறைக்கின்றது.
(5) எவ்வகைத் துணிகளுக்கும் பொருத்தமானது.

* * *

